# புத்தரா காரல் மார்க்சா ?



புத்தரையும், காரல் மார்க்சையும் ஒப்பிட்டுப் பார்ப்பது வேடிக்கையாகத் தோன்றலாம். ஆனால், இது குறித்து வியப்படைய ஏதுமில்லை. புத்தருக்கும் மார்க்சுக்கும் 2381 ஆண்டுகள் கால இடைவெளி உள்ளது. புத்தர் கி.மு. 563 இல் பிறந்தவர். காரல் மார்க்ஸ் கி.பி. 1818 இல் பிறந்தவர். மார்க்ஸ் புதிய தத்துவமான அரசியல், அரசியல் சார்ந்த பொருளாதார அணுகுமுறையை அமைத்துத் தந்தவர். மாறாக, புத்தர் ஒரு மதத்தைத் தோற்றுவித்ததைவிட அதிகம் செய்ததாகச் சொல்லப்பட்டாலும் அரசியல், பொருளாதாரம் ஆகியவற்றில் துளியும் தொடர்பில்லாதவராக இருந்தார் என்று நம்பப்படுகிறது.

இந்தக் கட்டுரையின் தலைப்பு, "புத்தரா காரல் மார்க்சா". இது, இவ்விருவரிடையே உள்ள ஒற்றுமையையும் முரண்பாடுகளையும் வெளிக்கொணர்கிறது. இவ்விருவரும் பல நூற்றாண்டு கால இடைவெளியால் பிரிக்கப்பட்டவர்கள்; மாறுபட்ட துறையைச் சார்ந்தவர்கள்; வெவ்வேறு சிந்தனையைக் கொண்டவர்கள். எனவே, இவ்விருவரையும் ஒப்பிடுவது விந்தையாகக் கூட தோன்றலாம். புத்தரையும் மார்க்சையும் ஒப்பிடுவது கண்டு மார்க்சியவாதிகள், எள்ளி நகையாடலாம். மார்க்ஸ் நவீன சிந்தனையாளர் எனவும், புத்தர் தொன்மையானவர் என்றும் கூட ஒதுக்கித் தள்ளலாம். அந்த வகையில், புத்தரை தங்களது தத்துவத்தைத் தந்த தலைவரோடு ஒப்பிடுவது, பிற்போக்கானது என்றும் புறந்தள்ளலாம்.

இதைத் தவிர, வேறு எத்தகைய ஒப்பீட்டை இவ்விருவரிடையே நம்மால் கொண்டுவர முடியும்? மார்க்சியவாதிகள் புத்தரிடம் என்ன கற்றுக்கொள்ள முடியும்? மேலும், புத்தருக்கும் காரல் மார்க்சுக்கும் இடையேயான ஒப்பீடு ஆர்வத்தை ஏற்படுத்துவதாகவும், பல புதிய பரிமாணங்களை விளக்குவதாகவும் அமையும். இரண்டு தத்துவங்களையும் படித்த மாணவன் நான். இரண்டு தத்துவங்களிலும் ஆர்வம் உள்ளவன் நான். இந்த ஆர்வம் புரிதலும், இவ்விரு தத்துவங்களையும் ஒப்பிடுமாறு என்னை வலிந்து உந்தியது.

மார்க்சியவாதிகள், திறந்த மனதோடு புத்தரையும் அவரது தத்துவங்களையும் ஆய்வுக்குட்படுத்தி புத்தர் எதற்காகப் போராடினார், எதைத் தன்னுடைய இலக்காக வகுத்துக் கொண்டார் என்பதைப் புரிந்து கொண்டால், தங்களது அணுகு முறையைக் கண்டிப்பாக மாற்றிக் கொள்வர். அதே நேரத்தில், புத்தரின் முழு தத்துவத்தையும் மார்க்சியவாதிகளால் ஏற்றுக் கொள்ள முடியுமா என்பது சந்தேகமே. ஆனால், புத்தரின் கொள்கை, தங்களது மார்க்சியத்தின் கொள்கையினின்று பிற்போக்கானதில்லை என்பதை மட்டுமாவது அவர்கள் உணர்ந்து கொள்வார்கள் என்பது உறுதி.

புத்தர் பொதுவாகவே "அகிம்சை' என்னும் தத்துவத்துடன் தொடர்புடையவராகப் போற்றப்படுகிறார். புத்தருக்கு அகிம்சை தத்துவமே முதன்மையானதும், இறுதியானதுமாக இருந்ததாக நாம் இன்று வரை நம்பிக் கொண்டிருக்கிறோம்.

இதற்கப்பால், புத்தர் கற்பித்தவை மிகப் பரந்த அளவிலானது. இது பலருக்குத் தெரியாது. எனவே, புத்தரின் கொள்கைகளை இங்கு விரிவாகப் பட்டியலிட வேண்டிய தேவை இருக்கிறது. நான் "திரிபீடக'த்திலிருந்து (பவுத்த மறை நூல்) கற்றுணர்ந்ததை, இங்கு வகைப்படுத்தியுள்ளேன்.

1. சமயம், ஒரு சுதந்திர சமூகத்திற்கு இன்றியமையாதது.

2. ஏதோ ஒரு மதம் என்ற ரீதியில் மனிதர்கள் ஒரு மதத்தையோ மார்க்கத்தையோ கைக்கொள்ளலாகாது.

3. மதம் என்பது வாழ்வியல் உண்மைகளைத் தேட வேண்டும் மாறாக, கற்பனையான கடவுள், ஆத்மா, சொர்க்கம், நரகம் போன்றவற்றைக் கொண்டிருக்கக் கூடாது.

4. மதத்தின் மய்யமாக, ஒரு போதும் கடவுள் இருக்கக் கூடாது.

5. ஆத்மா, சொர்க்கத்திற்குப் போவது ஆகியவை மதத்தின் இறுதி எல்லையாக இருக்கக் கூடாது

6. யாகங்களில் பலியிடுவதை அங்கீகரிப்பது மதமாகாது.

7. மதம், மக்களின் மனதில்தான் உயிர் வாழ்கிறது; சாத்திரங்களில் உயிர் வாழ்வதில்லை.

8. மனிதனும் ஒழுக்கமும்தான் மதத்தின் மய்யக் கருப்பொருளாக இருத்தல் வேண்டும். இல்லை எனில், மதம் என்பது கொடூரமான கற்பனையாகப் போய்விடும்.

9. மதத்தின் உச்சமாக ஒழுக்கம் அமைந்தால் மட்டும் போதாது, அவ்வொழுக்கம் தவிர்க்க வியலாத விதியாகப் போற்றப்பட வேண்டும்.

10. மதத்தின் தேவை, உலகை மறுகட்டமைப்புச் செய்வதாகும். உலக வாழ்க்கை மகிழ்ச்சியுடன் கூடியதாக அமைய வேண்டும். மாறாக, இல்லாத மறு உலகங்களை நோக்கித் திரிவதாக இருக்கக் கூடாது

*"பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் ஆங்கில நூல் தொகுப்பு' : 3 பக்கம் : 441*

# பாட்டாளிகளின் சர்வாதிகாரம் தவிர்க்க முடியாததா?



புத்தர், காரல் மார்க்ஸ் தத்துவங்களை ஒப்பிடுவதற்கு முன்பு, காரல் மார்க்சின் தத்துவங்கள், எப்படி இவ்வளவு காலம் தாக்குப்பிடித்தன என்பதை நாம்

கணக்கிட வேண்டும். வரலாறு, மார்க்சின் கருத்துகளை எவ்வளவு தூரம் மறுதலித்துள்ளது என்பதையும், மார்க்சின் எதிர்ப்பாளர்கள், மார்க்சின் தத்துவத்தை எந்தளவுக்குச் சிதைத்துள்ளனர் என்பதையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

மார்க்சிய தத்துவங்கள் 19ஆம் நூற்றாண்டின் இடையில் உருவாக்கப்பட்டவையாகும். தொடக்கம் முதல் இன்று வரை இத்தத்துவங்கள் மிகுந்த விமர்சனத்திற்கு உட்படுத்தப்பட்டன. இவ்விமர்சனங்களால், காரல் மார்க்சின் தத்துவத்தளங்கள் பல துண்டுகளாக உடைக்கப்பட்டன. மார்க்சின் தத்துவமான, 'மார்க்சின் சமூக அமைப்பு' தவிர்க்க முடியாதது என்பது முழுமையாக நிராகரிக்கப்பட்டது.

மார்க்ஸ் தன்னுடைய 'மூலதனம்' என்ற நூலை வெளியிட்டு 70 ஆண்டுகளுக்குப் பிறகுதான் 1917இல் பாட்டாளிகளின் சர்வாதிகாரம் உருவாக்கப்பட்டது. கம்யூனிசம் என்ற பாட்டாளிகளின் சர்வாதிகாரம் ரஷ்யாவில் நடைமுறைப்படுத்தப்பட்டபோது, மார்க்ஸ் கணித்தபடி, 'தவிர்க்க இயலாத' ஒன்றாக மனித முயற்சிகளின்றி அது உருவாக்கப்படவில்லை. அங்கு, அதாவது ரஷ்யாவில் புரட்சி உருவாக்கப்பட்டது; தேர்ந்த திட்டமிடுதலோடு அப்புரட்சி வடிவமைக்கப்பட்டது. அப்புரட்சி பல வன்முறைகளையும், ரத்த சேதத்தையும் உள்ளடக்கியே ரஷ்யாவில் அடியெடுத்து வைத்தது.

உலகின் பிற நாடுகள், 'பாட்டாளிகளின் சர்வாதிகாரம்' தங்கள் நாடுகளுக்கும் வரும் என இன்றுவரை காத்துக் கிடக்கின்றனர். மார்க்சிய தத்துவங்களின் சமத்துவம் தவிர்க்க முடியாதது என்பது போன்ற பல தளங்கள் நடைமுறையிலும், தர்க்க ரீதியிலும் தவறானது என நிரூபிக்கப்பட்டன. வரலாறு என்பது, பொருளாதார விளக்கமான பொருள் முதல்வாதத்தை ஆதாரமாகக் கொண்டது என்பதை யாரும் இன்று ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை.
(பாட்டாளிகளின்) சர்வாதிகாரம் மெல்ல மெல்லப் பரவி நிலைக்கும் என்பதை இன்று யாரும் நம்பத் தயாராக இல்லை. இதைப் போலவே, மார்க்சின் பிற தத்துவங்களும் ஆதாரமற்று நடைமுறையிலிருந்து வெகுவாக விலகிப் போய்க் கொண்டிருக்கின்றன.

மார்க்சின் கொள்கைத் தீயின் எஞ்சிய பகுதிதான் இன்றுள்ளது. இது, எஞ்சிய பகுதியாக இருப்பினும், மிகுந்த முக்கியம் வாய்ந்ததாக உள்ளது. இன்று மீதமுள்ளவற்றை நான்காக நான் காண்கிறேன்.

1. தத்துவங்கள் கடமைகள் என்பது, இந்த உலகை மறு கட்டுமானம் செய்வதாக இருத்தல் வேண்டும். மாறாக, உலகின் தொடக்கம் பற்றி விவாதித்துக் கொண்டு நேரத்தை விரயம் செய்தல் கூடாது.

2. வர்க்கங்களுக்கிடையே தேவையின் அடிப்படையிலேயே வேறுபாடு உள்ளது.

3. தனிநபர் சொத்துடைமை ஒரு வர்க்கத்தினருக்கு மட்டும் அதிகாரத்தையும், பிற வர்க்கத்தினருக்கு சோகத்தையும், சுரண்டலையும் பரிசாக அளிக்கிறது.

4. எனவே, இத்துயர் நீக்கப்பட வேண்டும். இது, தனிநபர் சொத்துடைமையை அழிப்பதால் மட்டுமே சாத்தியம். எனவே, இதுவே நற் சமூகத்திற்கான வழியாகும்.

இனி புத்தருக்கும் காரல் மார்க்சுக்கும் இடையிலான ஒப்பீட்டைக் காணலாம்:
மேற்சொன்ன நான்கு தத்துவங்களில், முதலானதில் புத்தருக்கும் காரல் மார்க்சுக்கும் முழு உடன்பாடு உள்ளது. இதை விளக்குவதற்கு புத்தருக்கும், போத்த பாதர் என்ற பார்ப்பனருக்கும் இடையே நிகழ்ந்த ஓர் உரையாடலை மேற்கோள் தருகிறேன். போத்த பாதர், புத்தரிடம் பின்வரும் கேள்விகளைக் கேட்கிறார்.

1.இந்தஉலகம் அழிவற்றதா?
2. இந்த உலகம் முழுமையானதா?
3. இந்த உலகம் முடிவற்றதா?
4. 'ஆத்மா' உடலைப் போன்றதா?
5. இந்த உடலும், ஆத்மாவும் வெவ்வேறானதா?
6. உண்மையை உணர்ந்தவன் மரணத்திற்குப் பின்பும் வாழ்கிறானா?
7. மரணத்திற்குப் பிறகு மீண்டும் வாழ்கிறானா? அல்லது மீண்டும் வாழ்வதில்லையா?

இந்த வினாக்களுக்குப் புத்தர் பின்வருமாறு பதிலளிக்கிறார்.

# பொதுவுடைமை துன்பத்தைத் தீர்க்குமா?



போதபத்தரின் கேள்விகளுக்கு புத்தர் பின்வருமாறு பதிலளிக்கிறார்:
"போதபத்தரே! உங்களுடைய கேள்விகளுக்கு எந்த விதமான பதிலையும் நான் தர விரும்பவில்லை. "
புத்தர் ஏன் எவ்வித பதிலையும் போதபத்தரின் கேள்விகளுக்குத் தரவில்லை ? போதபத்தரின் கேள்விகள் பயனற்ற கேள்விகள். தம்மம் , நன்னடத்தை, பற்றற்று வாழுதல் , தீமையில் இருந்து தம்மை தூய்மைப்படுத்திக் கொள்ளுதல் , மன அமைதி அடைதல், மெய்யறிவு பெறுதல், மனிதனின் அகம் நோக்கிப் பார்த்தல் மற்றும் உன்னதம் அடைதல் போன்ற கேள்விகளை போதபத்தர் எழுப்பவில்லை. எனவே , நான் அவருடைய கேள்விகளுக்கு எத்தகைய பதிலையும் தர விரும்பவில்லை என புத்தர் கூறினார்.

மேலும், புத்தருக்கும், கோசல நாட்டு மன்னன் பசநந்திக்கும் இடையே நடந்த உரையாடலை இங்கு தர விரும்புகிறேன். "அரசர்களுக்கிடையிலும் பண்பாளர்களுக்கிடையிலும், பார்ப்பனர்களுக்கிடையிலும் இல்லத்து ஒழுகும்

மக்களிடையிலும், தாய் - மகன் இடையிலும், மகன் - தந்தை இடையிலும், சகோதரன் - சகோதரிக்கு இடையிலும் , நண்பர்களுக்கு இடையிலும் எப்பொழுதுமே முரண்பாடுகள் உருவாகி வருகின்றன " என்று பசநந்தி , புத்தரிடம் முறையிடுகிறார். பசநந்தியின் வார்த்தைகளை புத்தர் மறுதலிக்கவில்லை. பசநந்தியின் வார்த்தைகள் சமூகத்தின் பிரதிபலிப்பு என்பதை புத்தர் உணர்ந்திருந்திருந்ததே இதற்கான காரணமாகும்.

புத்தரின் பதில் என்ன ? "வருத்தமும் , துன்பமும் இந்த உலகில் உள்ளது. துக்கத்தின் மூலம் எது? துக்கத்திற்கு தீர்வு என்ன? துக்கத்தை நிவர்த்தி செய்வதற்கான வழி என்ன" என்று ஆராயுமாறு புத்தர் கூறுகிறார். காரணம் , இந்தக் கேள்விகளுக்கான பதிலில்தான் சமூகத்திற்கான பயன் அடங்கியுள்ளது. மனித சமூகம் , உன்னதம் அடைவதற்கான வழிமுறை அடங்கியுள்ளது.

"சமூகத்தின் துன்பத்திற்கு சுரண்டல்தான் காரணம் என்ற மார்க்சின் வாதத்தை நாம் ஆதாரமாகக் கொண்டால் கூட , புத்தர் காரல் மார்க்சின் தத்துவத்தில் இருந்து விலகிச் சென்றுவிடவில்லை.

"துக்கத்திற்குக் காரணம் சொத்துடைமை. ஆனந்தா! இதை நீ உணர வேண்டும். பொதுவுடைமை என்பது துக்கத்திற்கு தீர்வைத் தரலாம். ஆனால் , பொதுவுடைமை மட்டுமே துக்கத்திற்கான முழுத்தீர்வையும் தர முடியாது. பொதுவுடைமைத் தத்துவம் , எவ்வித சொத்தையும் தனக்கென சேர்த்துக் கொள்ளாததில் இருந்து தொடங்குகிறது. இது , துறவிகளுக்கு வேண்டுமானால் சாத்தியப்படலாம்.

ஆனால், பிக்குகள் கூட எட்டு தனிச் சொத்துகளை கைக்கொண்டிருக்கலாம் என புத்தர் வரையறுக்கிறார்:

3. நாள்தோறும் அணிந்து கொள்ள மூன்று துவறாடைகள் அல்லது ஏதேனும் உடை 4. நடந்து செல்ல ஆதாரமாக ஒரு இருப்புக் கழி 5. பிச்சைப் பாத்திரம் 6. சவரம் செய்யும் கத்தி 7. ஊசி 8. தண்ணீர் வைத்துக் கொள்ள பாத்திரம்.

வெள்ளி, தங்கம் போன்றவைகளை பிக்குகள் பெற்றுக் கொள்ள தடை விதிக்கப்பட்டிருந்தது. சொத்துடைமை எட்டு பொருட்களில் மட்டுமே வரையறை செய்யப்பட்டிருந்தது. இந்த விதிகள் 'ரஷ்யாவின் கம்யூனிச ' விதிகளைக் காட்டிலும் கடுமையானதாகக் காணப்படுகிறது.

நாம் வழிமுறைகளைப் பற்றி ஆராய்வோம். புத்தர் கொண்டு வந்த 'பொதுவுடைமை' ன்று படிநிலைகளைக் கொண்டது. முதலாவதாக , பஞ்ச சீல ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தல். புத்தர் அடைந்த மெய்யறிவு ' அவருக்கு சமூகத்தின் பிரச்சினைகளைத் தெளிவாக உணர்த்தியது. "உலகத்தில் துன்பமும் , வருத்தமும் நிரம்பியுள்ளது ' என்பதே புத்தர் தத்துவத்தின் மய்யம்.

இந்தத் துன்பத்திற்கும் , வருத்தத்திற்கும் உடனடித் தீர்வு காணவேண்டியது மிகவும் அவசியமாகும். உலகில் துன்பம் நிலவுகிறது. துன்பத்திற்கான தீர்வு இருக்கிறது. தீர்வுக்கான வழிமுறை இருக்கிறது. இம்மூன்றையும் தத்துவமாக புத்தர் மக்களுக்குத் தந்தார். துன்பத்திற்கான காரணங்கள் என இரண்டை புத்தர் வகைப்படுத்துகிறார். அவை என்ன?

*'பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் ஆங்கில நூல் தொகுப்பு' : 3 பக்கம் : 445*

## சடங்கு முறைகளைக் கைவிட வேண்டும்



மனிதனின் துன்பத்திற்கும் மகிழ்ச்சியற்ற தன்மைக்கும், அவனுடைய சொந்த தீய நடத்தையே காரணமாகும். துன்பத்துக்கான காரணத்தைப் போக்குவதற்காக புத்தர் பஞ்சசீலத்தைப் பின்பற்றுமாறு அறிவுறுத்தினார். பஞ்சசீலத்தில் பின்வரும் நெறிகள் உள்ளன: 1. எந்த உயிரையும் அழிப்பதையும், அழிவுக்குக் காரணமாயிருப்பதையும் தவிர்த்தல் 2. களவு செய்யாமல் தவிர்த்தல் அதாவது, ஏமாற்றுவதின் மூலமோ வன்முறையின் மூலமோ பிறர் பொருளைத் தனதாக்கிக் கொள்வதையும் தன்னிடம் வைத்துக் கொள்வதையும் தவிர்த்தல் 3. பொய் சொல்லாமல் தவிர்த்தல் 4. காமம் தவிர்த்தல் 5. மது தவிர்த்தல்.

உலகில் நிலவும் துன்பத்திற்கும் மகிழ்ச்சியற்ற தன்மைக்கும் மனிதனுக்கு மனிதன் இழைக்கும் அநியாயமே காரணம் என்பது புத்தரின் கருத்து. இந்த அநியாயத்தை எப்படி நீக்குவது? இதற்கு அவர் கூறிய வழி, உயரிய எண்வகைப் பாதை. இந்த எண்வகைப் பாதையின் அம்சங்கள்:

1. நல்ல கருத்துகள் அதாவது மூட நம்பிக்கையிலிருந்து விடுதலை
2. நல்ல நோக்கங்கள், அறிவு மற்றும் நேர்மையுள்ள மனிதனுக்குத் தகுந்தவையான உயர்ந்த
நோக்கங்கள்
3. நல்ல பேச்சு; அதாவது பணிவு, திறந்த உள்ளம், உண்மை
4. நல்ல நடத்தை, அதாவது, அமைதியான நேர்மையான, தூய்மையான நடத்தை

5. நல்ல வாழ்க்கை வழி, அதாவது எந்த உயிருக்கும் தீங்கு ஏற்படுத்தாதது
6. விடா முயற்சி, அதாவது, மற்ற ஏழு அம்சங்களிலும்
7. விழிப்பாகவும், செயல் துடிப்புடனும் இருந்தல்
8. நல்ல சிந்தனை, அதாவது, வாழ்க்கையின் அதிசயங்கள் பற்றித் தீவிரமாகச் சிந்தித்தல்.

உன்னத எண்வகைப் பாதையின் நோக்கம், உலகில் நன்னெறியின் அரசை நிறுவி அதன் மூலம் உலகிலிருந்து மகிழ்ச்சியற்ற தன்மையையும் துன்பத்தையும் ஒழிப்பதாகும். நற்செய்தியின் மூன்றாவது பகுதி 'நிப்பான' கோட்பாடு ஆகும். 'நிப்பான கோட்பாடு' உன்னத எண்வகைப் பாதைக் கோட்பாட்டின் ஒருங்கிணைந்த பகுதி ஆகும். நிப்பானம் இல்லாமல் எண்வகைப் பாதை நிறைவு பெறாது.

எண்வகைப் பாதை கைகூடுவதற்கு என்னென்ன இடையூறுகள் உள்ளன என்பதை 'நிப்பான கோட்பாடு' கூறுகிறது. இந்த இடையூறுகளில் முக்கியமானவை பத்து. புத்தர் இவற்றைப் பத்து ஆசவங்கள், தளைகள் அல்லது இடையூறுகள் என்று குறிப்பிடுகிறார்.

முதலாவது இடையூறு, தான் என்ற மாயை. ஒரு மனிதன் முற்றிலும் தன்னைப் பற்றிய எண்ணத்திலேயே ஆழ்ந்து, தன்னுடைய மனதின் ஆசைகளை நிறைவு செய்யும் என்று, தான் நினைக்கிற ஒவ்வொரு அற்ப விஷயத்தையும் துரத்திச் சென்று கொண்டிருக்கும் வரை அவனுக்கு மேன்மையான பாதை கிடைக்காது. அளவிடற்கரிய முழுமையில், தான் ஒரு நுண்ணிய பகுதி என்ற உண்மையைக் காண்பதற்கு அவனுடைய கண்கள் திறந்தால்தான் தன்னுடைய தற்காலிகத் தனித்தன்மை எவ்வளவு நிலையற்றது என்பதை அவன் உணர்ந்தால்தான், இந்தக் குறுகிய பாதையில் நுழைவதே கூட அவனுக்குச் சாத்தியமாகும்.

இரண்டாவது இடையூறு, சந்தேகமும் தீர்மானம் இன்மையும் ஆகும். வாழ்க்கையின் பெரும் புதிரை விடுவிப்பதற்கு ஒருவனுடைய கண்கள் திறக்கும் போதும், ஒவ்வொரு தனித்தன்மையின் நிலையாமையை அவன் உணரும்போதும் அவனுக்குத் தனது செயல்கள் பற்றி சந்தேகமும் தீர்மானம் இன்மையும் எழுகின்றன.

செய்வதா? செய்ய வேண்டாமா? என்கிற தடுமாற்றமும், தன்னுடைய தனித்தன்மையே நிலையற்றதாயிருக்கும்போது, எதையும் ஏன் செய்ய வேண்டும் என்ற கேள்வியும் எழுந்து அவனைத் தீர்மானமற்றவனாகவும் செயலற்றவனாகவும் ஆக்குகின்றன. ஆனால், வாழ்க்கைக்கு இது சரிப்பட்டு வராது. அவன் தனது ஆசிரியரைப் பின்பற்றுவதென்றும், உண்மையை ஏற்பதென்றும், அதற்கான முயற்சியில் இறங்குவதென்றும் முடிவு செய்து கொள்ள வேண்டும்; இல்லையென்றால் அவன் முன்னேற முடியாது.

மூன்றாவது இடையூறு, சடங்குகளின் சக்தியை நம்பியிருப்பதாகும். ஒருவன் எவ்வளவு

நல்ல முடிவுகள் செய்து கொண்டாலும், அவை எவ்வளவு உறுதியாக இருந்தாலும், அவன் சடங்கு முறைகளைக் கைவிட்டாலன்றி, புறத்தே செய்யும் செய்கைகளும், புனிதச் சடங்குகளும், புரோகிதர்களின் சக்திகளும் தனக்கு எந்த வகையிலேனும் உதவும் என்ற நம்பிக்கையை விட்டாலன்றி, எந்தப் பயனும் ஏற்படாது. இந்த இடையூறுகளை ஒருவன் கடந்தால்தான் நீரோட்டத்தில் அவன் இறங்கியிருப்பதாகவும், விரைவிலோ, தாமதமாகவோ அவன் வெற்றிபெற முடியும் என்று கூற முடியும்.

*'பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் ஆங்கில நூல் தொகுப்பு' : 3 பக்கம் : 447*

# புத்தர், காரல் மார்க்ஸ் இலக்கு ஒன்று; வழிவகை வேறு



நான்காவது இடையூறு , உடல் சார்ந்த ஆசைகளாகும். அய்ந்தாவது , மற்ற மனிதர்கள் மீது, தவறான எண்ணம் கொள்வதாகும். ஆறாவது , இறந்த பிறகு வாழும் மறுமை வாழ்வு பற்றிய ஆசையாகும். ஏழாவது , பொருட்தன்மையற்ற உலகில் மறுமை வாழ்வு வாழும் ஆசையாகும். எட்டாவது இடையூறு கர்வமும் , ஒன்பதாவது தானே நல்லவன் என்ற எண்ணமும் ஆகும். மனிதர்கள் வெல்வதற்குக் கடினமான பிழைகள் இவை. குறிப்பாக , உயர்ந்த மனங்கள் இவற்றுக்கு தங்களைவிடக் குறைந்த திறனும் , குறைந்த தூய்மையும் கொண்டவர்களிடம் இயல்பாக ஏற்படும் இளக்கார மனப்பான்மைக்கு உள்ளாகின்றன.

பத்தாவது இடையூறு அறியாமையாகும். மற்ற இடையூறுகளையெல்லாம் வென்ற பின்பும் இது தடையாக நிற்கும். அறிவாளிகளுக்கும் நல்லவர்களுக்கும் முள்ளைப் போல் உறுத்திக் கொண்டு , மனிதனின் கடைசி எதிரியாக கடுமையான பகைவனாக இது இருக்கும். 'நிப்பானம்' என்பது, உன்னத எண்வகைப் பாதையைப் பின்பற்றுவதற்குத் தடையாக உள்ள இந்த இடையூறுகளைக் கடப்பதாகும். உன்னத எண்வகைப் பாதைக் கோட்பாடு, ஒரு மனிதன் எத்தகைய மனப்பான்மையை முயன்று வளர்க்க வேண்டும் என்பதைக் கூறுகிறது. உன்னத எண்வகைப் பாதையில் செல்வதற்கு ஒருவன் முயன்று கடக்க வேண்டிய இடையூறுகள் என்ன என்பதை நிப்பானக் கோட்பாடு எடுத்துரைக்கிறது.

புதிய நற்செய்தியின் நான்காவது பகுதி 'பராமிதங்'களின் கோட்பாடு ஆகும். பராமிதங்களின் கோட்பாடு, நாள்தோறும் வாழ்க்கையில் கடைப்பிடித்து நடக்க வேண்டிய பத்து ஒழுக்கங்களை எடுத்துரைக்கிறது. இந்தப் பத்து ஒழுக்கங்களாவன:

1. பன்னா அல்லது அறிவு ; அவிஜ்ஜா, மோகம் அல்லது அறியாமை. பன்னா வேண்டுமென்றால், ஒருவன் தனது அய்யங்கள் பற்றி தன்னைவிட அறிவுடையோரிடம் கேள்வி கேட்டு அவற்றை நீக்கிக் கொள்ள வேண்டும். அறிவுடையோருடன் இணங்கிப் பழக வேண்டும் ; அறிவை வளர்க்கும் பல்வேறு கலைகளையும் அறிவியலையும் பயில வேண்டும். 2. சீலம் என்பது அறநெறி உணர்வு ; தீமை செய்யாமையும் , நன்மை செய்வதும் ஆகிய இயல்பு ; தவறு செய்வதில் நாணமடைதல் ; தண்டனைக்கு அஞ்சி தீமை செய்யாமல் தவிர்த்தல் சீலமாகும். சீலம் என்றால் தவறு செய்ய நாணுதல் என்று பொருள். 3. 'நிக்காமம்' என்பது உலக சிற்றின்பங்களைத் துறத்தல். 4. தானம் என்பது தன்னுடைய உடைமைகளையும். ரத்தத்தையும் , உறுப்புகளையும், உயிரையும் கூட மற்றவர்களின் நன்மைக்காக கைம்மாறு கருதாமல் கொடுப்பது. 5. வீரியம் என்பது நல்ல முயற்சி. ஒருவன் எடுத்துக் கொண்ட எந்தச் செயலையும் மனம் மாறுபடாமல் , முழுத்திறனுடன் செய்தல்.

6. காந்தி என்பது பொறையுடைமை. வெறுப்பவரை வெறுக்காமலிருப்பது இதன் சாராம்சம். வெறுப்பினால் வெறுப்பு தணிவதில்லை. பொறையுடைமைதான் வெறுப்பைத் தணிக்கும். 7. கூச்சம் என்பது உண்மை. புத்தராக விரும்புகிறவன் ஒருபோதும் பொய் பேசமாட்டான். அவன் பேசுவது உண்மை. உண்மையைத் தவிர வேறெதுவும் இல்லை. 8. 'அதிட்டானம்' என்பது குறிக்கோளை அடைந்தே தீருவது என்ற உறுதி. 9. மேத்தம் என்பது எல்லா உயிர்களிடத்தும் பகைவர் , நண்பர், விலங்கு, மனிதன் ஆகிய எல்லா உயிர்களிடத்தும் கொள்ளும் அன்பு உணர்ச்சி. 10. உபேக்கை என்பது பற்றின்மை ; அது அலட்சியம் அல்ல. அது , விருப்போ வெறுப்போ இல்லாத ஒரு மனநிலை. விளையும் பலனால் பாதிக்கப்படாமலும் அதேசமயம் அதை அடையும் முயற்சியில் ஈடுபட்டும் இருக்கும் நிலை.

இந்த ஒழுக்கங்களை ஒருவன் தன்னுடைய முழுமையான திறனாய்வுக்குப் பிறகு பின்பற்ற வேண்டும். அதனால்தான் இவை 'பராமிதா'க்கள் (நிறைவுற்ற நிலைகள்) எனப்படுகின்றன. புத்தர் ஞானம் பெற்றதன் விளைவாக , உலகிலிருந்து துன்பத்தையும் துக்கத்தையும் ஒழிப்பதற்கு அறிவுறுத்திய நற்செய்தி இத்தகையதாக உள்ளது. புத்தர் பின்பற்றிய வழிவகைகள் , அவர் காட்டிய வழியில் ஒருவன் தானே மனப்பூர்வமாகச் செல்லும்படி, அவனது அறநெறி உணர்வைச் செம்மையாக மாற்றியமைப்பனவாக இருந்தன என்பது தெளிவாகத் தெரிகிறது.

பொதுவுடைமைவாதிகள் பின்பற்றிய வழிவகைகளும் இதே போலத் தெளிவாகவும் சுருக்கமாகவும் விரைவாகவும் உள்ளனவா ? பொதுவுடைமையை நிறுவுவதற்கு இரண்டு வழிகள்தான் உள்ளன என்று பொதுவுடைமைவாதிகள் கூறுகிறார்கள். முதலாவது வன்முறை. இப்போதுள்ள முறையை தகர்ப்பதற்கு இதைவிடக் குறைந்த எதுவும் போதுமானதாகாது. இரண்டாவது, பாட்டாளிகளின் சர்வாதிகாரம். புதிய முறை தொடர்ந்து செயல்படுவதற்கு இதற்குக் குறைந்த எதுவும் போதுமானதாகாது. இப்போது புத்தருக்கும்

காரல் மார்க்சுக்கும் இடையே உள்ள ஒற்றுமைகளும் வேற்றுமைகளும் தெளிவாகிறது. வேற்றுமைகள் வழிவகைகள் பற்றியவையே. குறிக்கோள் இருவருக்கும் பொதுவானது.

*'பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் ஆங்கில நூல் தொகுப்பு': 3 பக்கம் : 447*

# புத்தரின் அகிம்சை ஆக்கப்பூர்வமான வன்முறையே



நாம் வழிவகைகளை மதிப்பீடு செய்ய வேண்டும். யாருடைய வழிவகைகள் மேலானவை, நீண்டகாலம் நிலைத்துப் பயன்தருபவை என்று பார்க்க வேண்டும். எப்படி இருப்பினும், இரு தரப்பிலும் சில தவறான புரிதல்கள் உள்ளன. இதைத் தெளிவுபடுத்த வேண்டியது அவசியம். வன்முறையை எடுத்துக் கொள்ளுங்கள். பலருக்கு வன்முறையைப் பற்றிய நினைப்பே நடுக்கத்தைத் தருகிறது. ஆனால், இது வெறும் உணர்ச்சியே. வன்முறையை முற்றிலுமாகக் கை விட்டுவிட முடியாது. பொதுவுடைமையைக் கடைப்பிடிக்காத நாடுகளிலும், கொலை செய்தவன் தூக்கிலிடப்படுகிறான். தூக்கிலிடுவது வன்முறை ஆகாதா? பொதுவுடைமை அற்ற நாடுகள், பொதுவுடைமை அற்ற பிற நாடுகள் மீது போர் தொடுக்கின்றன. பல லட்சக்கணக்கான மக்கள் கொல்லப்படுகிறார்கள். இது வன்முறை ஆகாதா?

ஒரு கொலைகாரன், ஒரு குடிமகனைக் கொன்றான் என்பதற்காக அவனைக் கொல்லலாம் என்றால், போரில் ஒரு படை வீரன் பகை நாட்டைச் சேர்ந்தவன் என்பதற்காக இன்னொருவனைக் கொல்லலாம் என்றால், உடைமைகள் தனி ஒருவனுக்குச் சொந்தமாயிருக்கும் காரணத்தால் பிற மனிதர்கள் துன்பத்துக்குள்ளாகிறார்கள் என்றால், அந்த உடைமைகளின் சொந்தக்காரரனை ஏன் கொல்லக் கூடாது? உடைமைகளின் சொந்தக்காரனுக்கு ஏன் விலக்களிக்க வேண்டும்? தனியுடைமை ஏன் புனிதமானதாகக் கருதப்பட வேண்டும் என்பதற்குக் காரணமே இல்லை.

புத்தர் வன்முறையை எதிர்த்தார். ஆனால், அவர் நீதியை ஆதரித்தார்; நீதியை நிலைநாட்ட வன்முறையைப் பயன்படுத்துவதை அவர் அனுமதித்தார். அவருக்கும் வைசாலியின் படைத் தலைவரான சிம்ம சேனாவுக்கும் இடையே நடைபெற்ற உரையாடல் இதை விளக்குகிறது. புத்தர் அகிம்சையை அறிவுறுத்துகிறார் என்று கேள்விப்பட்ட சிம்மசேனா அவரிடம் சென்று கேட்டார்:

"பகவானே, நீங்கள் அகிம்சையை அறிவுறுத்துகிறீர்கள். அப்படியெனில், குற்றம் செய்த ஒருவனை தண்டிக்காமல் விட்டுவிட வேண்டுமா? நாங்கள் எங்களுடைய மனைவி,

குழந்தைகள் மற்றும் செல்வங்களைக் காப்பாற்றுவதற்குப் போர் செய்யக் கூடாது என்று சொல்கிறீர்களா? அகிம்சையின் பெயரால் நாங்கள் குற்றவாளிகளிடம் துன்புற வேண்டுமா? ததாகதரே, நீங்கள் உண்மையின் நலனுக்கும் நீதியின் நலனுக்கும் வேண்டியதான போராயிருந்தால் கூட, அறவே தடை செய்கிறீர்களா?"

புத்தர் பதிலளித்தார்: "என் அறிவுறையை நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். குற்றம் செய்தவன் தண்டிக்கப்பட வேண்டும்; குற்றமற்றவன் விடுவிக்கப்பட வேண்டும். குற்றம் செய்தவனைத் தண்டிப்பது நீதிபதியின் தவறு அல்ல. தண்டனை விதிக்கும் நீதிபதி சட்டத்தைத்தான் செயல்படுத்துகிறார். அவர் அகிம்சையை மீறிவிட்டதாகக் குற்றம் கூற முடியாது. நியாயமான அமைதியைப் பாதுகாப்பதற்கான எல்லா வழிகளும் தோல்வியடைந்து போனால், போர் தொடங்குகிறவன் மீதுதான் இம்சையின் பொறுப்பு சாரும். தீய சக்திகளுக்கு ஒரு போதும் ஒருவன் பணியக் கூடாது. போர் இருக்கலாம். ஆனால், அது சுயநல நோக்கங்களுக்காக இருக்கக் கூடாது."

வன்முறைக்கு எதிராகப் பேராசிரியர் ஜான் திவே கூறுவது போன்ற வேறு வாதங்களும் இருக்கின்றன. குறிக்கோள் நல்லதானால், எந்த வழிவகையும் நியாயம்தான் என்பது அறநெறியைத் தலைகீழாக மாற்றும் கொள்கை. இப்படி சொல்கிறவர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் பேராசிரியர் திவே சரியாகவே கேட்கிறார்: குறிக்கோளைத் தவிர வேறு எது வழிவகையை நியாயப்படுத்த முடியும். குறிக்கோள்தான் வழிவகையை நியாயப்படுத்துகிறது என்கிறார்.

குறிக்கோள்தான் வழிவகையை நியாயப்படுத்துகிறது என்பதை புத்தர் ஒப்புக்கொண்டிருக்கக்கூடும். வேறு எது நியாயப்படுத்தக்கூடும்? குறிக்கோளின் நலனை முன்னிட்டு வன்முறை நியாயப்படுத்தப்பட்டால், அந்தக் குறிக்கோளை அடைவதற்கு வன்முறையைக் கையாள்வது சட்டபூர்வமான வழியேயாகும் என்று அவர் கூறியிருப்பார். வன்முறைதான் ஒரே வழியாயிருந்தால் உடைமையாளர்களுக்கு அவர் வன்முறையிலிருந்து நிச்சயமாக விலக்களித்திருக்க மாட்டார்.

ஆனால், குறிக்கோளை அடைவதற்கு அவரது வழிவகைகள் வேறு விதமானவை என்பதை நாம் காணப்போகிறோம். வன்முறை என்பது என்ன என பேராசிரியர் திவே சுட்டிக்காட்டியிருக்கிறார். "ஆக்கரீதியான நோக்கங்களுக்கு பலத்தைப் பயன்படுத்துவது அவசியமானாலும், பலத்தை ஒரு சக்தியாகப் பயன்படுத்துவதற்கும், அதை வன்முறையாகப் பயன்படுத்துவதற்கும் இடையே ஒரு வேறுபாடு இருப்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்."

புத்தரின் அகிம்சை, ஜைன மதத்தை நிறுவிய மகாவீரரின் அகிம்சையைப் போல அவ்வளவு முழுமையானது அல்ல. அவர் பலத்தைச் சக்தியாகப் பயன்படுத்துவதை மட்டுமே அனுமதித்திருப்பார். பொதுவுடைமைவாதிகளின் அகிம்சையைப் போல அவ்வளவு முழுமையானது அல்ல. பொதுவுடைமைவாதிகள் அகிம்சையை முற்றான ஒரு தத்துவமாகப் பேசுகிறார்கள். ஆனால், புத்தர் இதற்கு முற்றிலும் முரணான கருத்தைக் கொண்டிருந்தார்.

*'பாபாசாகேப் டாக்டர் அம்போத்கர் ஆங்கில நூல் தொகுப்பு': 3 பக்கம்: 450*

# ஜனநாயகமும் சர்வாதிகாரமும்



சர்வாதிகாரத்தை புத்தர் சற்றும் விரும்பவில்லை. அவர் ஜனநாயகவாதியாகப் பிறந்தார்; ஜனநாயகவாதியாகவே இறந்தார். அவர் வாழ்ந்த காலத்தில் 14 முடியரசு நாடுகளும் 4 குடியரசுகளும் இருந்தன. அவர் சாக்கிய வம்சத்தைச் சேர்ந்தவர்; சாக்கியர்களின் அரசு ஒரு குடியரசாகும். அவர் வைசாலி நாட்டிடம் மிகவும் அன்பு கொண்டு , அதைத் தமது இரண்டாவது சொந்த நாடாகக் கொண்டிருந்தார். ஏனென்றால் அது ஒரு குடியரசாகும். அவர் மகாபரிநிர்வாணம் அடைவதற்கு முன் தமது கடைசி வர்ஷாவாசத்தை வைசாலியில்தான் கழித்தார். வர்ஷாவாசம் முடிந்தபின் அவர் தமது வழக்கப்படி வைசாலியை விட்டு வேறு எங்கேனும் செல்ல முடிவு செய்தார். சிறிது தூரம் சென்ற பிறகு அவர் வைசாலியைத் திரும்பிப் பார்த்து ஆன்ந்தாவிடம் கூறினார்: "ததாகதர் வைசாலியைப் பார்ப்பது இதுதான் கடைசிமுறை". அந்தக் குடியரசிடம் அவர் அவ்வளவு அன்பு வைத்திருந்தார்.

அவர் முழுக்க முழுக்க சமத்துவத்தைப் பின்பற்றினார். ஆரம்பத்தில் புத்தர் உள்ளிட்ட எல்லா பிக்குகளும் கிழிந்த துணிகளால் ஆன ஆடைகளை அணிந்தார்கள். பிரபுத்துவ வகுப்புகளைச் சேர்ந்தவர்கள், பிக்கு சங்கத்தில் சேர்ந்து விடாமல் தடுப்பதற்காக இவ்வாறு விதி செய்யப்பட்டது. பின்னர் மாபெரும் மருத்துவரான ஜீவகன் முழுமையான துணியால் ஆன ஆடை ஒன்றைப் புத்தரை ஏற்றுக் கொள்ளச் செய்தார். புத்தர் உடனே ஆடை பற்றிய விதியை மாற்றி எல்லாருக்கும் அது பொருந்துமாறு செய்தார்.

புத்தரின் வளர்ப்புத் தாயான மகா பிரஜாபதி கோதமி, பிக்குணி சங்கத்தில் சேர்ந்திருந்தார். ஒரு முறை அவர் புத்தருக்குக் குளிர் ஏற்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டார். உடனே அவர் புத்தருக்கென தலைக்குக் கட்டும் துணி ஒன்றைத் தயாரிக்கத் தொடங்கினார். அதைச் செய்து முடித்ததும் புத்தரிடம் கொண்டு சென்று அதை அவர் அணிந்து கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். ஆனால் , புத்தர் அதை ஏற்க மறுத்துவிட்டார். அது ஒரு அன்பளிப்பாக கொடுக்கப்பட்டால் , சங்கம் முழுவதற்கும் அது அன்பளிப்பாக இருக்க வேண்டும் என்றும் , சங்கத்தில் ஒரு உறுப்பினருக்கு மட்டும் அன்பளிப்பாக இருக்க முடியாது என்றும் அவர் கூறினார். தாயார் எவ்வளவோ மன்றாடிக் கேட்டும் புத்தர் அதை ஏற்க முடியாதென்று உறுதியாக மறுத்து விட்டார்.

பிக்கு சங்கம் மிகவும் ஜனநாயக முறையிலான அமைப்பைக் கொண்டிருந்தது. புத்தர் , பிக்குகளில் ஒருவராகத்தான் இருந்தார். அதிகபட்சமாக , அவர் ஓர் அமைச்சரவையின்

உறுப்பினர்களுக்கிடையே மூத்த அமைச்சரைப் போல் இருந்தார் எனலாம். அவர் ஒரு போதும் சர்வாதிகாரியாக இருக்கவில்லை. அவர் இறப்பதற்கு முன் இரண்டு முறை, அவருக்குப் பின் சங்கத்தை நிர்வகிக்க அதன் தலைவராக ஒருவரை நியமிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். ஒவ்வொரு முறையும் அவர் மறுத்து விட்டார். தம்மம்தான் சங்கத்தின் உயர் தளபதி என்று அவர் கூறினார். அவர் சர்வாதிகாரியாக இருக்கவோ, சர்வாதிகாரியை நியமிக்கவோ இணங்கவில்லை.

வழிவகைகளின் மதிப்பு எப்படிப் பட்டது? யாருடைய வழிவகைகள் மேலானவையாகவும் நீண்டகாலம் நிலைத்துப் பயன் தருவனவாகவும் உள்ளன?

பொதுவுடைமைவாதிகள், தங்களுடைய மதிப்பு மிக்க குறிக்கோள்களை அடைவதில் வேறு மதிப்புள்ள குறிக்கோள்களை அழித்து விடவில்லை என்று கூற முடியுமா? அவர்கள் தனிநபர் உடைமையை அழித்து விட்டார்கள். இது, மதிப்புமிக்க குறிக்கோள் என்று வைத்துக் கொண்டாலும், அதை அடையும் செயல் முறையில் வேறு குறிக்கோள் எதையும் அழித்து விடவில்லை என்று பொதுவுடைமைவாதிகள் கூற முடியுமா? தங்களுடைய குறிக்கோளை அடைவதற்காக அவர்கள் எத்தனை பேரைக் கொலை செய்திருக்கிறார்கள்? மனித உயிருக்கு மதிப்பு கிடையாதா? உடைமைகளின் சொந்தக்காரர்களின் உயிரை எடுக்காமல் உடைமைகளை மட்டும் அவர்கள் எடுத்துக் கொண்டிருக்க முடியாதா?

சர்வாதிகாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். சர்வாதிகாரத்தின் குறிக்கோள் புரட்சி நிரந்தரமானதாக இருக்க வேண்டும் என்பதே. இது ஒரு மதிப்புமிக்க குறிக்கோள். ஆனால், இந்தக் குறிக்கோளை அடைவதில் வேறு எந்த மதிப்புமிக்க குறிக்கோள்களையும் தாங்கள் அழித்துவிடவில்லை என்று பொதுவுடைமைவாதிகள் கூற முடியுமா? சர்வாதிகாரம் என்றால் தன்னுரிமை இல்லாமை அல்லது நாடாளுமன்ற அரசு இல்லாமை என்று கூறப்படுகிறது. இரண்டு விதமான பொருள்களுமே தெளிவாக இல்லை.

நாடாளுமன்ற அரசு இருக்கும்போது கூட தன்னுரிமை இல்லாமல் உள்ளது. ஏனென்றால் சட்டம் என்பது இருக்கும்போது தன்னுரிமை என்பது இல்லை. சர்வாதிகாரத்துக்கும் நாடாளுமன்ற அரசு முறைக்கும் இதில்தான் வேறுபாடு உள்ளது. நாடாளுமன்ற அரசில் தன்னுரிமையின் மீது அரசு விதிக்கும் கட்டுப்பாடுகளைக் குறை கூறுவதற்கு ஒவ்வொரு குடிமகனுக்கும் உரிமை இருக்கிறது. நாடாளுமன்ற அரசில் உங்களுக்கென கடமையும் உரிமையும் இருக்கிறது. சட்டத்துக்குக் கீழ்ப்படிவது கடமை; அதைக் குறை கூறுவது உரிமை. சர்வாதிகாரத்தில் கீழ்ப்படியும் கடமை மட்டும்தான் உண்டு; குறை கூறும் உரிமை கிடையாது.

*'பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் ஆங்கில நூல் தொகுப்பு' : 3 பக்கம் : 451*

# பொதுவுடைமை அரசால் நன்மை உண்டாகுமா?



பொதுவுடைமைக் கொள்கையின்படி அரசு , நிரந்தர சர்வாதிகாரத் தன்மையுடன் இருக்கும் என்று கூறப்படுகிறது. இது , தங்களுடைய அரசியல் தத்துவத்தில் ஒரு பலவீனமான அம்சம் என்று பொதுவுடைமைவாதிகளே உணர்கிறார்கள். ஆனால், அரசு அமைப்பு இறுதியாக வாடி , காய்ந்து உதிர்ந்து போய் விடும் என்று கூறி அதன் கீழ் புகலிடம் தேடுகிறார்கள். ஆனால் , அவர்கள் இரண்டு கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது. எப்போது அது உதிர்ந்து போகும்? அரசு உதிர்ந்து போகும்போது அதன் இடத்துக்கு எது வரும் ? முதல் கேள்விக்கு அவர்கள் நிச்சயமான பதில் எதுவும் கூற முடியாது.

ஒரு குறுகிய காலத்துக்கு சர்வாதிகாரம் இருப்பது , ஜனநாயகத்தைப் பாதுகாப்பானதாக வைப்பதற்குக்கூட நல்லதாக இருக்கலாம். சர்வாதிகாரம் தன் வேலையைச் செய்து முடித்தபிறகு, ஜனநாயகத்தின் பாதையில் எதிர்ப்படும் தடைகளையும் பாறைகளையும் அகற்றிய பிறகு , ஜனநாயகப் பாதையைப் பாதுகாப்பானதாக ஆக்கிய பிறகு அது , தன்னைத் தானே ஏன் கலைத்துக் கொள்ளக் கூடாது ? அசோகரே இதற்கு எடுத்துக்காட்டாக விளங்கவில்லையா ? அவர் கலிங்கத்தின் மீது வன்முறையைப் பயன்படுத்தினார். ஆனால் , அதன்பிறகு அவர் வன்முறையை முற்றிலுமாகக் கைவிட்டார். இன்று நம்மில் வெற்றி பெற்றவர்கள் , தங்களிடம் தோல்வியடைந்தவர்களின் ஆயுதங்களைக் களைவது மட்டுமின்றி , தங்களுடைய ஆயுதங்களையும் களைந்து விட்டால் உலகம் முழுவதும் அமைதி நிலவும்.

பொதுவுடைமைவாதிகள் இதற்கு எந்த பதிலையும் கூறவில்லை. அரசு வாடி , காய்ந்து உதிர்ந்து போகும்போது , அதன் இடத்துக்கு எது வரும் என்ற கேள்விக்கு நிறைவான பதில் கூறப்படவில்லை. இந்தக் கேள்வி, அரசு எப்போது உதிர்ந்து போகும் என்பதை விட முக்கியமானது. அதன் பிறகு அராஜகம் வருமா ? அப்படியானால் , பொதுவுடைமை அரசை உருவாக்குவது பயனற்ற செயலாகும். வன்முறையினால்தான் அதைத் தாங்கிப் பிடிக்க முடியும் ; அதற்கு ஆதரவாக நிற்கும் வன்முறையை விலக்கிக் கொண்டால் , அராஜகம் ஏற்படும் என்றால் பொதுவுடைமை அரசினால் என்ன நன்மை ?

வன்முறையை விலக்கிக் கொண்டபிறகு , அது நிலைநிற்குமாறு தாங்கக் கூடியது மதம் ஒன்றுதான். ஆனால் , பொதுவுடைமைவாதிகளுக்கு மதம் என்பது முற்றிலும் வெறுக்கத்தக்கதாகும். மதத்தின் மீது அவர்கள் மிக ஆழ்ந்த வெறுப்பு கொண்டிருப்பதால் , பொதுவுடைமைக்கு உதவியாக இருக்கக் கூடிய மதங்களுக்கும் , உதவியாயில்லாத

மதங்களுக்கும் இடையே வேறுபாடு பார்க்க மறுக்கிறார்கள். பொதுவுடைமைவாதிகள் கிறித்துவ மதத்தின் மீது கொண்டுள்ள வெறுப்பை, புத்த மதத்தின் மீதும் காட்டுகிறார்கள்; இந்த இரண்டுக்கும் இடையில் உள்ள வேறுபாட்டைக் காணும் பொறுமை அவர்களிடம் இல்லை.

கிறித்துவ மதத்தின் மீது பொதுவுடைமைவாதிகள் கூறும் குற்றச்சாட்டு இரண்டு வகையானது. முதலாவது குற்றச்சாட்டு , கிறித்துவ மதம் மக்களை மறு உலக மனப்பான்மை கொண்டவர்களாக்கி , இந்த உலகில் வறுமையை சகித்துக் கொள்ளச் செய்கிறது என்பதாகும். முன்பு எடுத்துக்காட்டப்பட்ட மேற்கோள்களிலிருந்து புத்த மதத்தின் மீது இத்தகைய குற்றச்சாட்டைக் கூற முடியாது என்பது தெளிவாகும்.

கிறித்துவ மதத்தின் மீது பொதுவுடைமைவாதிகள் கூறும் இரண்டாவது குற்றச்சாட்டையும் புத்த மதத்தின் மீது கூறமுடியாது. 'மதம் மக்களின் அபின் ' என்று பொதுவுடைமைவாதிகள் கூறும் கூற்றில் இந்தக் குற்றச்சாட்டு அடங்கியுள்ளது. 'பைபிளில்' கூறப்படும் மலைப் பிரசங்கத்தை அடிப்படையாகக் கொண்டு , இந்தக் குற்றச்சாட்டு கூறப்படுகிறது. மலைப் பிரசங்கம் வறுமையையும் பலவீனத்தையும் மேல் நிலைக்கு உயர்த்துகிறது. ஏழைகளும் பலவீனர்களும் பரலோகத்தை அடைவார்கள் என்று அது வாக்களிக்கிறது. புத்தருடைய அறிவுரைகளில் மலைப் பிரசங்கத்தைப் போன்ற எதுவும் இல்லை. அவருடைய அறிவுரை , செல்வம் சேர்க்கச் சொல்கிறது. இது குறித்து புத்தர், தம்முடைய சீடர்களில் ஒருவரான அனாதபிண்டிகாவுக்கு அளித்த அறிவுரையை கீழே தருகிறேன்.
ஒருமுறை அனாதபிண்டிகா , புத்தர் தங்கியிருந்த இடத்துக்கு வந்தார். அவருக்கு வணக்கம் செலுத்திவிட்டு அருகில் அமர்ந்து கொண்டு இவ்வாறு கேட்டார்:
“இல்வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவனுக்குப் பெறுவதற்கு அரிதான , ஆனால், அதே நேரம் வரவேற்கத்தக்க, மகிழ்ச்சியான, உவப்பான விஷயங்கள் எவை என்று புத்தர் கூறுவாரா?"

புத்தர் இந்தக் கேள்விக்கு இவ்வாறு பதிலளித்தார்: "இத்தகைய விஷயங்களில் முதலாவது விஷயம் , சட்டப்படி செல்வம் சேர்ப்பதாகும். இரண்டாவது விஷயம் , உங்களுடைய உறவினர்களும் சட்டப்படி செல்வம் சேர்க்குமாறு பார்த்துக் கொள்வதாகும். மூன்றாவது விஷயம் , நீண்ட காலம் வாழ்ந்து முதுமை அடைவதாகும். "

"உண்மையில் இல்வாழ்வான் பெறுவதற்கு அரிதான , ஆனால், வரவேற்கத்தக்க , மகிழ்ச்சியான, உவப்பான, இவற்றை அடைவதற்கு முன்பு நான்கு நிபந்தனைகள் உள்ளன. நம்பிக்கை என்ற அருள்வளம் , அறநெறி ஒழுக்க நடத்தை என்ற அருள்வளம் , தாராளத்தன்மை என்ற அருள்வளம் , விவேகம் என்ற அருள்வளம் ஆகியவை இந்த நிபந்தனைகளாகும்."

*'பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் ஆங்கில நூல் தொகுப்பு' : 3 பக்கம் : 453*

# ரஷ்ய, பிரெஞ்சுப் புரட்சிகளில் கிடைக்காத சகோதரத்துவம்



ஒழுக்க நடத்தை என்ற அருள்வளம் , கொல்லாமை , திருடாமை, கூடா ஒழுக்கம் தவிர்த்தல் , பொய் சொல்லாமை , கள்ளுண்ணாமை ஆகிய நடத்தையாகும். தாராளத்தன்மை என்ற அருள்வளம் , இல்வாழ்வான் தன் மனதில் போராசைக்கு இடம் கொடுக்காமல் , தாராளமாக, சுதந்திரமாக வாழ்வது, கொடுப்பதில் மகிழ்ச்சி காண்பது , திருப்பிக் கொடுப்பதில் நாணயமாக இருப்பது , பிறருக்கு வழங்குவதில் மனம் ஈடுபட்டவனாகவும் இருப்பதாகும்.
விவேகம் என்ற அருள்வளம் என்ன? ஒரு இல்வாழ்வான் தன் மனதில் போராசை, கெட்ட எண்ணம் கொண்டவனாகவும் , சோம்பலும் துயிலும் மிகுந்தவனாகவும் , தவறான செயல்களைச் செய்து கொண்டு , செய்ய வேண்டியதைச் செய்யத் தவறுபவனாகவும் இருந்தால், அவனுக்கு மகிழ்ச்சியும் பெருமையும் இல்லாமல் போகின்றன. போராசை , கெட்ட எண்ணம் , சோம்பல், துக்கவசப்படுதல், மனதைச் சிதறவிடுதல் , படபடப்பு, சந்தேகம் ஆகியவை மனதின் மாசுகளாகும். இத்தகைய மாசுகளிலிருந்து விடுபடும் இல்வாழ்வான், மகத்தான விவேகத்தை , உன்னதமான விவேகத்தை , தெளிவான கண்ணோட்டத்தை, நிறைவான மெய்யறிவைப் பெறுகிறான்.

இவ்வாறாக, சட்டரீதியிலும், நேர்மையான முறையிலும் மிகுந்த உழைப்பினாலும் , தோளின் வலிமையாலும் , நெற்றி வியர்வையாலும் செல்வம் சேர்ப்பது , பெரிய அருள்வளமாகும். இத்தகைய இல்வாழ்வான் மகிழ்ச்சியும் உற்சாகமும் நிறைந்தவனாகவும், தனது பெற்றோர், மனைவி, மக்கள், பணியாளர்கள், உழைப்பாளர்கள், நண்பர்கள், தோழர்கள் ஆகிய அனைவரையும் மகிழ்ச்சி அடையச் செய்பவனாகவும் இருக்கிறான். ரஷ்யர்கள் , தங்களுடைய பொதுவுடைமைக்கு ஆதரவாக இருக்கும் வன்முறை விலக்கிக் கொள்ளப்பட்ட பிறகு , அதற்கு இறுதி ஆதாரமாக புத்த மதத்தைப் பயன்படுத்துவதைப் பற்றி சிந்திக்கக்கூடத் தயாராக இல்லை. ரஷ்யர்கள் தங்களுடைய பொதுவுடைமை பற்றி பெருமைப்படுகிறார்கள். ஆனால் புத்தர் , சர்வாதிகாரம் இல்லாமலேயே பிக்கு சங்கத்தில் பொதுவுடைமையை நிறுவினார் என்பது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். இதை அவர்கள் மறந்து விடுகிறார்கள். அந்தப் பொதுவுடைமை, தொடக்க நிலையில் இருந்திருக்கலாம். ஆனால் , அது சர்வாதிகாரம் இல்லாத பொதுவுடைமை என்பது பெரிய அதிசயம். லெனின் இதைச் செய்யத் தவறிவிட்டார்.

புத்தரின் செயல் முறை வித்தியாசமானது. மனிதனின் மனதை மாற்றுவது , அவனுடைய இயல்பை மாற்றுவது , அவரது செயல் முறையாகும். இவ்வாறு மாற்றுவதன் மூலம் மனிதன் எதைச் செய்தாலும் தன்னுடைய சொந்த விருப்பத்தின் பேரில் , எந்த விதமான பலத்தையும் பயன்படுத்தாமல், கட்டாயம் இல்லாமல் செய்கிறான். மனிதனின் இயல்பை மாற்றுவதற்கு, புத்தர் பின்பற்றிய வழி அவரது தம்மம். இடைவிடாது தம்மத்தை

அறிவுறுத்துவது ஆகும். மக்கள், தாங்கள் செய்ய விரும்பாத எதையும், அது அவர்களுக்கு நல்லது என்றாலும்கூட , செய்யுமாறு கட்டாயப்படுத்தாமலிருப்பதே புத்த செயல் முறை. அவர்கள் செய்ய வேண்டியதைத் தாங்களாகவே உணர்ந்து செய்யும் வகையில் அவர்களின் இயல்பை மாற்றுவதே அவரது செயல்முறை.

ரஷ்யாவில் பொதுவுடைமை சர்வாதிகாரம், மிகச் சிறப்பான சாதனைகள் புரிந்திருப்பதாகப் பெருமையாகக் கூறப்படுகிறது. இதை மறுக்க முடியாது. அதனால்தான் ரஷ்ய சர்வாதிகாரம், எல்லா பிற்படுத்தப்பட்ட நாடுகளுக்கும் நல்லது என்று கூறுகிறேன். இது , சர்வாதிகாரம் நிரந்தரமாக இருக்க வேண்டும் என்று கூறுவதாகாது. மனித இனம் விரும்புவது, பொருளாதார நன்மைகளை மட்டும் அல்ல ; மனித உறவுகளையும் அது விட்டு விடாமல் வைத்துக் கொள்ள விரும்புகிறது. நிரந்தர சர்வாதிகாரம் , மனித உறவுகளில் அக்கறை காட்டவில்லை. இனி அக்கறை காட்டுவதாகவும் தெரியவில்லை.

அறிஞர் கார்லைல் கூறியது தவறுதான். ஏனென்றால் , மனிதனுக்குப் பொருளியல் வசதிகள் வேண்டும். ஆனால் , பொதுவுடைமைத் தத்துவமும் அதே போலத் தவறானதே. ஏனென்றால், அந்தத் தத்துவத்தின் நோக்கம் , மனிதர்களும் பன்றிகளைப் போன்றவர்கள்தான் என்பது போல , அவர்களைக் கொழுக்க வைப்பதாகவே இருக்கிறது. மனிதன் பொருளியல் வளர்ச்சியும் அதே சமயம் சகோதரத்துவ உணர்வையும் பெற வேண்டும். சமூகம் ஒரு புதிய அடிப்படையை அமைக்க முயன்று வந்தது. அது , பிரெஞ்சுப் புரட்சியில் மூன்று சொற்களில் சுருக்கிக் கூறப்பட்டது ; சகோதரத்துவம், சுதந்திரம், சமத்துவம். இந்த முழக்கத்தினால்தான் பிரெஞ்சுப் புரட்சிக்கு வரவேற்பு கிடைத்தது. ஆனால் , அது சமத்துவத்தை உருவாக்கத் தவறிவிட்டது.

நாம் ரஷ்யப் புரட்சியை வரவேற்கிறோம் ; ஏனென்றால், சமத்துவத்தை ஏற்படுத்துவது அதன் நோக்கமாக உள்ளது. ஆனால் , சமத்துவத்தை ஏற்படுத்தும்போது சமூகம் , சகோதரத்துவத்தையும் சுதந்திரத்தையும் தியாகம் செய்துவிட முடியாது என்பதை எவ்வளவு வலியுறுத்தினாலும் தகும். புத்தரின் வழியைப் பின்பற்றினால்தான் இந்த மூன்றும் சேர்ந்து இருக்க முடியும் என்று தோன்றுகிறது. பொதுவுடைமை இவற்றுள் சுதந்திரத்தையும், சமத்துவத்தையும் மட்டும்தான் கொடுக்க முடியும் ; சகோதரத்துவத்தை கொடுக்க முடியாது.

'பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் ஆங்கில நூல் தொகுப்பு' : 3 பக்கம்: 454